# பெரிய இடத்துச் செய்தி



கவிஞரேறு வாணிதாசன்

# பெரிய இடத்துச் செய்தி

அவர்கள் வெறியேறி இருந்தார்கள்! முழுவெறி! மது வெறி! சிறிது சிறிதாக அவர்கள் செவ்விதழ்கள் ...வத்த பழச்சாறு தந்த கொடுவெறி! மகிழ்ச்சியைச் ...றிது சிறிதாக ஊட்டி மடமையில் சாய்க்கும் கள்வெறி ...வர்கள் கண்களிலே கூத்தாடியது. நிலவு சிந்தும் ...ர் துளிகள் போல வியர்வைத் துளிகள் விற்புருவத்தில் ...மத்தாகச் சொட்டக் கோவைப்பழம் போன்ற மதுவெறியால் மலர்ந்த கண்கள், குளத்தி... கெண்டைகளைப் போல மிதந்து கொ...

...கள் இருவரும் பேசிக்கொண்டிருந்தனர். சீமாட்டிகள் இருவரின் இதழ்க் கடையிலே தவழும் ...கை-எதிரொலிக்கும் சிரிப்பு—இடைமறித்த பேச்சு மதுவெறி மண்டைக்கு ஏறிவிட்டது என்பதை சுருக்க-விளக்க-விரிவுரையாக விளக்கிக்கொண்டிருந்தன.

அவர்களில் ஒருத்தி சீமாட்டி ஆந்திரே தெ பிரசியர், மற்றொருத்தி சீமாட்டி நோயெமி தெகர்தேன்ஸ்.

கடலைப் பார்க்கும் கவின்மிகு கூடத்தில் அவர்கள் இருவரும் பகல் உணவை முடித்துக் கொண்டனர்.

திறந்து விடப்பட்ட கண்ணாடிச் சன்னல்களின் வழியே இளந் தென்றல், சிறிது வெப்பமும் குளிர்மையும் கலந்த தென்றல். கடலிலே படிந்து தவழ்ந்து கரையை

நோக்கிப் பாயும் தென்றல் மெல்ல கூடத்தில் நுழைந்து விளையாடிக் கொண்டிருந்தது. எத்தனையோ பெண்களின் உடலில் உராய்ந்து ஆடையைப் பற்றி இழுத்து இன்பத்தை ஊட்டிய மெல்லிய காற்றிற்கு இவர்கள் மட்டும் என்ன விதி விலக்கா!

கூடத்தில் இருந்த சாய்வு நாற்காலியில் செல்வ வளத்தால் செழுப்புற்ற உடலைச் சாய்த்து ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள் அந்தச் சீமாட்டிகள்.

இடை இடையே அவர்கள் செவ்விதழ்கள் செந்நீரை உறிஞ்சுவதுபோல மதுக் கிண்ணத்தை உறிஞ்சிக் கொண்டிருந்தன. ஊடு ஊடே புகைந்து கொண்டிருக்கும் சிகரெட்டை ஒட்டி இழுத்துப் புகையை உயர்த்தி விட்டு வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் அச்சீமாட்டிகள்.

செவ்விதழ்கள் உருவாக்கிய சிறு சந்தின் வழியாகச் சிகரெட்டுப் புகை விரைந்து வந்து கொண்டிருந்தது. நேராக வந்த புகை சிறிது பரந்து நெளிந்து சிறு சிறு மங்கிய கோடுகளை உண்டாக்கிச் சிலந்திக் கூட்டைப்போல வானிலே மிதந்து கொண்டிருந்தது. புகையைக் கலைக்கும் அச்சீமாட்டியின் கை வீச்சோ சிறகை விரித்துப் பாயும் சிறு புள்ளை நினைவூட்டியது. சுட்டு விரலால் கலைக்கப் படும்போது மட்டும் அந்தப் புகைச் சுருள் துண்டிக்கப் பட்டு இரு கூறுய்ப் பிரிந்து மேலே எழுந்து வானிலே பல வளையங்களைச் சித்தரித்து விட்டு மெல்ல மறைந்தது. கூடம் எதிரொலிக்கும் சிரிப்பு, குளிர்மையான பார்வை, குறும்பான பேச்சு இவைகளுக்கிடையே மெல்ல மெல்ல மறையும் அந்தச் சிகரெட்டுப் புகை அவர்களுக்கு இன்பத்தை ஊட்ட மறக்கவில்லை.

மனதை விட்டு இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். மதுக் கிண்ணம் குறையக் குறைய மனதிலிருந்த ஆசை

எண்ணங்கள் அடைபட்ட செய்திகள் யாவும் தலை காட்டத் தொடங்கின.

அன்று தான் அவர்களின் கணவன்மார்கள் பாரிசுக்குத் திரும்பினார்கள். கோடைக் காலத்தைப் போக்க அவர்கள் தேர்ந்தெடுத்த அச்சிற்றூர், மோப்பம் பிடிக்கும் ஆண்கள், வட்டமிடும் கட்டழகர்கள், அடிக்கடி வரமுடியாத தொலைவில் நகரத்தை விட்டு விலகி இருந்தது. அந்தக் காரணத்தாலேயே அச் சிற்றூர் அவர்களுக்கு மிக மிகப் பிடித்திருந்தது என்னலாம். பாரிசிலுள்ள அரசியல், பொருளாதாரம், களியாட்டம் முதலிய வேலைகளை முடித்துக் கொண்டு ஒரு கிழமையோ, ஐந்து நாட்களோ சென்றுகூடத் திரும்பி வரலாம் என்று நினைத்திருப்பார்கள். அவர்களுக்கு அச்சிற்றூர் அவ்வளவு பிடித்திருந்தது. காரணம் மனைவியைப் பற்றி கவலைப்படவேண்டிய நிலையை விழிப்போடு இருக்க வேண்டிய நிலையைப் அச்சிற்றூர் உண்டாக்காது என்ற முடிவுக்கு வந்தார்களே ஒழிய வெளிக்குக் கூறிக் கொள்ள வெட்கப்பட்டார்கள்.

கணவன் தன்னோடு இல்லாததால் சீமாட்டி ஆந்திரே தெ பிரசியருக்கு எரிச்சலாக இருந்தது. பொழுது போக்க என்ன செய்வது என்று நினைத்தாள். தன் வீட்டிற்கு விருந்துண்ண வரும்படி சீமாட்டி னோயெமியைக் கேட்டுக் கொண்டாள். இருவருமாகச் சேர்ந்து அடுக்களையில் புகுந்து அன்றைய உணவை மகிழ்ச்சியோடு பேசிக் கொண்டே சமைத்தார்கள்.

வேலை செய்தறியாதவர்கள், தட்டு முட்டுக்களைத் தொட்டறியாதவர்கள், செல்வத்திலே பிறந்து சீரோடு வளர்ந்தவர்கள், அடுக்களையில் புகும்போது அடக்க முடியாத மகிழ்ச்சி ஏற்படத்தான் செய்யும்.

அங்கு இங்கு ஓடி அது இது செய்கின்ற தன் எஜ

மானியைப் பார்த்தபோது வீட்டு வேலைக்காரிக்குச் சிரிப்பு வந்தது. சிரிப்பை அடக்கிக் கொண்டாளே ஒழிய சிரிக்கவில்லை அந்தப் பேதைப் பெண். சீமாட்டிகள் வேலை செய்வதைப் பார்க்கப் பார்க்கச் சற்று பொறுமை யாகக்கூட இருந்தது அவளுக்கு.

ஒருவாறு சமையலை முடித்து விட்டு இரு சீமாட்டி களும் பேசிக் கொண்டே குடித்தனர். என்றும் இல்லாத அளவு அன்று சற்று அதிகமாகவேத்தான் குடித்தார்கள். ஆசிரியர் இல்லாத வகுப்பு—ஆள்வோன் இல்லாத அலு வலகம் போல அந்த வீடு அன்று என்றுமில்லாத கல கலப்போடு காட்சியளித்தது

இரு ஆண்கள் அல்லது இரு பெண்கள் தனித்து இருக்கும் போதுதான் அவரவர்கள் உள்ளக் குறையைப் பேசுவது வழக்கம். அதிலும் அவர்கள் வாலிபர்களானால் சொல்லவே வேண்டியதில்லை. காதலைப் பற்றிய ஆய்வுரை கள் தான் அவர்கள் பேச்சின் தலைப்பாக இருக்கும். அதிலும் அவர்கள் மதுவருந்தி விட்டிருப்பார்களானால், அம்மம்மா அவர்கள் பேச்சே ஒரு தனியான வகைதான்.

உணவை முடித்துச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டே சிறுவர்கள் தீஞ்சுவைப் பொருளைச் சிறிது சிறிதாகச் சுவைப்பதைப் போல சிகரெட்டைச் சுவைத் துக் கொண்டிருந்தார்கள் அந்த இரு சீமாட்டிகளும்.

இளமை தவழும் இதழ்கள் சொற்களைச் சிந்திக் கொண்டிருந்தன. உண்மையில் தாங்கள் என்ன பேசு கிறோம் என்பது அவர்களுக்கே தெரியாது. அவ்வளவு வெறியேறி இருந்தனர். மது வெறி அவர்கள் உணர்வை நன்றாகத் தூண்டிக் கொண்டிருந்தது.

அருகில் இருந்த நாற்காலியின் முதுகின்மேல் கடைந் தெடுத்த தந்தம் போன்ற கால்களை உயரத் தூக்கி நீட்டிக் கொண்டே "இன்பமான பொழுது போக்குத்

காதலர்கள் தேவை. இந்தத் தனிமை, இன்று போல இன்பமான தனிமை நமக்கு ஏற்படும் என்று தெரிந்திருந்தால், பாரிசிலிருந்து காதலர் இருவர் வரும்படி முன் கூட்டி ஏற்பாடு செய்திருப்பேன். எனக்குமட்டுமல்ல உனக்காகவும்தான்." என்றாள் நோயேமி. அவள் மற்றவளைவிட அதிக வெறியேறி இருந்தாள்.

"எனக்கு அதைப்பற்றிக் கவலை இல்லை. இன்றைக்கு இப்பொழுது வேண்டுமானாலும் கூட என்னால் முடியும். இது ஒரு பெரிய செய்தியா" சீமாட்டி ஆந்திரே தெ பிரசியரின் வாயிலிருந்து சதாரணமாக, அலட்சியமாக வெளி வந்த சொற்கள் இவை.

இனி அவர்கள் பேச்சைச் சற்றுத் தொடர்ந்து கேளுங்கள் :—என்ன - இங்கேயா ? இச் சிற்றூரிலா ? சரிதான் ஒரு குடியானவனோ ?

இல்லை...... ..இல்லை......

வேறு யார்— —யாரடி...சொல்லேன்.

எதை .....எதைச் சொல்லச் சொல்கிறாய் ?

உன் காதலனைப் பற்றித்தான். இங்கேயே—இப்பொழுதே வேண்டுமானால் கிடைக்கும் என்றாயே, அந்தக் காதலனைப்பற்றிச் சிறிது சொல்லேன் என்கின்றேன்.

அடியே ! என்னால் ஒரு காதலன் இன்றி வாழ முடியாது. நான் காதலிக்கப்படவில்லை யென்றால் நான் ஒரு நடைப் பிணமாகி விடுவேன். ஏன் ? இறந்தே விடுவேன் என்று கூடச் சொல்லலாம்.

நானும் அப்படித்தான்....

சரிதானா...... ?

ஆம்... ஆண்கள் இதைத் தெரிந்து கொள்வதே இல்லை. அதிலும் நம் கணவர்கள் முழு மோசம்.

இல்லையடி— ! சிறிதுகூட இல்லை...வேறு எப்படித்தான் அவர்கள் இருக்கமுடியும்...காதல் நமக்கு தேவை

அது நமக்கு ஆடம்பரம், தளுக்கு, மினுக்கு தொட்டால் துவளுகின்ற நிலே, துடுக்குத்தனம் அடுக்காத செயல்கள் முதலியவற்றை உண்டாக்கி விட்டது. அதுதான் நம் உள்ளத்திற்கு உணவு. அறிவுக்கேற்ற தீஞ்சுவை அமுது....

ஆம்...காதல் நம் வாழ்விற்கு இன்றியமையாதது.... —இன்றியமையாதது... இன்றியமையாதது....ஒரு முறையல்ல, இருமுறையல்ல... நூறு முறை ..ஆயிரம் முறை இன்றியமையாதது தான்.

ஒருவன் என்னே எங்கும் எப்பொழுதும் நினைப்பதை உணர்ந்து கொண்டால் போதும், அப்பொழுதுதான் எனக்கு இன்பம். அதுமட்டுமல்ல உறங்கும்போது உறங்கி விழித்த போதுங்கூட என்னைப் பற்றி அவன் கற்பனே செய்வதை, என்னே விரும்புவதை நான் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படி இல்லேயென்ருல் என் வாழ்க்கை மிக மிகக் கொடுமை யானதாகத்தான் இருக்கும். களிப்பில் மிதக்க வேண்டிய நான் கண்ணீர் சிந்திக் கதறுவேன்.

நான் மட்டும் வேரு... ..எனக்குந்தான் எண்ணி எண்ணி ஏங்குகின்ற இளம் நெஞ்சம், கூர்ந்து பார்த்து ஊடுருவும் குளிர்மை விழி, அரும்பு மீசை ஆசைப்பேச்சு இல்லேயென்ருல், என்னுல் அரை நொடி கூட வாழ முடியாதே.

நாம் வேறு என்னத்தான் செய்வதாம் நினைத்துப் பாரேன். மனிதத் தன்மையற்றவர்கள் இந்தக் கணவர்கள்......கட்டியணைப்பான், கன்னத்தை கிள்ளுவான், சிரிப்பான் சிங்காரியே என்பான், மான் விழி என்பான், மலர்க்கொடி என்பான், தேனடை என்பான் இதழை, திருமதி என்பான் முகத்தை வளேந்து கொடுப்பான், வர்ணனேப் பல்லவி பாடுவான், குறிப்பறிந்து கூத்தாடு

வான், இது ஆறு மாதம் அல்லது ஆண்டுவரை நடக்கும் நிகழ்ச்சி. தப்பித்தவறிப் பிள்ளை இல்லாதவளாக இருந்தால் இரண்டாண்டுவரை இன்பத் திருக்கூத்து. அதுவும் படிக்குப்படி குறைந்த அளவிலேயே நீடிக்கலாம். பிறகு என்ன ஆகும் தெரியுமா? கண்ணெடுத்தும் பாரான் அவன் கருத்திலே நம் கவலை. தேவை ஒன்றும் தோன்றாது. ஏதோ வீட்டில் இருப்பதும் போவதுமாக இருக்குமே ஒழிய கட்டாயத்திற்காகக் குடும்ப நாடகம் நடை பெறுமே ஒழிய வேறொன்றும் இருக்காது. இப்படிப் பட்ட ஆடவர்களைக் கணவன்மார்களை எப்படியடி காதலிப்பது, காதலிக்க முடியும். இந்தப் போலி வாழ்க்கையை சில நாட்கள் வேண்டுமானால் ஏற்றுக் கொள்ளலாம். வாழ்நாள் முழுமையும் ஏற்றுக்கொள்ள முடியுமா?

உண்மை-நீ கூறுவது யாவும் முழு உண்மை ஆனால்,

என்னடி ஆனால்......

இல்லை...ஒருவர் இருவர் கூடவா விதிவிலக்காக இருக்கமாட்டார்கள் என்று நினைத்தேன்.

போடிப் பைத்தியம். ஒருவன் கூட இல்லை. கணவன் மார்கள் அத்தனைபேரும் அப்படியேதான். அதில் சிறிது கூட உனக்கு ஐயம் வேண்டியதில்லை.

ஆம்......உண்மையேதான்.

இல்லையா....நான் எங்குப் பேச்சை நிறுத்தினேன்.... சொல்லு எனக்கு நினைவு இல்லை.

கணவர்களைப் பற்றி கூறினாய். கணவர்கள் எல்லாம் மனிதத் தன்மையற்றவர்கள், மட்டிகள் என்று கூறினாய்.

ஆம்......சரி....தா......ன் எல்லோரும் அப்படித் தான்.

உண்மை...

பிறகு—...

பிறகா...என்னடி...என்ன என்னையே கேட்கிறாயே?

பிறகு நான் என்ன கூறினேன்.

எனக்கென்ன தெரியும். நீ ஒன்றும் பிறகு சொல்லவில்லையே.

சரி...ஆமாம்...கொஞ்சம் பொறு. இதோ கூறுகிறேன்...

ஊம். சொல்லடி—சொல்...பேசாது இருக்கிறாயே. சொல்லேன்.

எனக்கு எங்கும் காதலர்கள் கிடைக்கிறார்களென்று சொன்னேனல்லவா.

ஆம்...உனக்கு மட்டும் எப்படியடி கிடைக்கிறார்கள்.

கேள். நான் சொல்வதை நன்றாகக் கேள். நான் ஒரு புது ஊருக்குவந்த உடனே அவர் யார் இவர் யார்? எங்கு இருக்கிறார்? என்ன செய்கிறார்? என்று தெரிந்து கொள்வேன்.—பிறகே தேர்தல் நடைபெறும்.

ஓ! தேர்தல் வேறா?

ஆம். ஆமடி—ஆம்...அது மிக முக்கியமானது—ஆள் ஓட்டை வாயனாக இருக்கக் கூடாதல்லவா. அதுமட்டுமா?—நம் இச்சைக் காற்றிற்கு ஏற்பச் சுழலுகின்ற காற்றாடியாக, கார் கண்டு ஆடும் கலாப மயிலாக, மகுடிக்கு மடங்கும் பாம்பாக அல்லவா அவன் இருக்க வேண்டும்.

சரியான வழிதான்......

இன்னும் கேள். அவன் நமக்குப் பிடித்தவனாக இருக்கவேண்டும். மனிதர்களில் சிலர் மனிதர்கள் போலவே இருப்பார்கள். ஆனால் நமக்கேற்ற மனிதர்களாக மனிதத் தன்மை உடையவர்களாக இருக்கமாட்டார்கள். அதற்காகத்தான் தேர்தல்.

கண்டிப்பாக, அதுதானே நமக்குத் தேவை.

பிறகுதான் தூண்டில் போடுவேன்.

தூண்டிலா-? அதென்னடி அது ?

நீ தூண்டிலிட்டு மீன் பிடிப்பதைப் பார்த்த தில்லையோ—?

இல்லை. இல்லவே இல்லை.

அது எவ்வளவு இன்பமானது தெரியுமா—இன்ப மானது மட்டுமல்ல. அறிவு வளர்ச்சியானதுங்கூட.

அப்படியா......!

ஆம்...! பெரிய இடம் என்கிற கழியில் அழகு என்கிற கயிற்றைக் கட்டி ஆடம்பரம் என்கிற முற் மூடிந்து விழி என்கிற சேலைச் சேர்த்து வீசுவேன் தூண்டிலை. பிறகு பாரேன் வேடிக்கையை.

பிறகு என்னடி நடக்கும்

மக்காக இருக்கிறாயே—நாம் விரும்புகின்றவனை வலை வீசிப் பிடிப்பதா கடினம். சிறப்பாக பெண்ணினத்திற் குப் பிறவியோடு கிடைத்த வல்லமைபடி அது—ஆண்கள் அந்த அறிவற்ற ஆண்கள் தாமே நம்மைத் தேர்ந்தெடுப் பதாக மனப்பால் குடிக்கிறார்கள். அது தவறு—நாமே தான் அவர்களைத் தேர்ந்தெடுக்கிறோம்......எப்பொழுதும் அவர்களல்ல......நாமேதான்......அழகுள்ளவளாக, அறிவுள்ளவளாக இருக்கும் வரை எல்லா ஆண்களும் ஒருவர் கூட விதி விலக்கின்றி நான் முந்தி நீ முந்தி என்று போட்டி போடுகிறார்கள். அவ்வளவுதான் அவர்கள் செய்வது—செய்யக் கூடும்...நாம்...பெண்களாகப் பிறந்த நாமே தான். ஒவ்வொருவராகப் பார்த்துப் பொறுக்கிய பிறகு தூண்டிலிடுகிறோம்.

அது சரி—நீ என்னதான் செய்தாய்?

என்ன செய்தேனா......நான் செய்தது ஒன்றுமில்லை. என்னை அவர்கள் நன்றாக மனங்குளிரப் பார்க்கும்படி பார்த்து ரசிக்கும்படி இடங் கொடுத்து நான் ஒன்றும் அறியாதவள் போல வேறெங்கேயோ பார்த்துக் கொண் டிருப்பேன். அவ்வளவுதான்.

பார்க்கும்படி விட்டால் போதுமா— அவ்வளவு தானு?

ஆம். அவ்வளவுதானடி—அது போதும்—அடிக்கடி நம்மைப் பார்க்கவேண்டிய வாய்ப்பை ஆண்களுக் களித்தால் அதுவே போதுமானது—உடனே உலகத்தில் வாழும் அத்தனை பெண்களில் நாம் தான் அழகி—நாம் தான் அவன் மனதைக் கவர்ந்தவள் என்ற முடிவுக்கு உடனே வந்து விடுவான். அவன் மனம் வேறெங்கும் பாயாது—பிறகு பாரேன் எந்த நேரத்திலும் நம் வீட்டின் அருகில் கால் சோர்வு கண் சோர்வு பொருட்படுத்தாது காத்துக்கிடப்பான். நாம் மட்டும் அவன் வரவால் பார்வையால் அறுவருப்பு அடையவில்லை என்பதை ஒருவாறு புன் சிரிப்பால் காட்டிவிடவேண்டும் அதுபோதும், மீன் தூண்டிலில் அகப்பட்டுவிடும். ஒன்றிரண்டு சிறிது நாட்கள் சென்று படுகின்ற மீன்களும் உண்டு. உடனே விழுந்து மாட்டிக் கொள்ளுகின்ற மீன்களே பெரும்பாலும் அதிகம். அது ஆளை, சூழ்நிலையைப் பொறுத்தது.

ஏனடி: நீ விரும்புகின்ற ஆட்களையெல்லாம் இப்படித்தான் உன் வலையில் வீழ்த்து வாயோ-?

பெருவாரியாக இப்படித்தான்.

தப்பித்தவறிக் கட்டுப்படாத காளைகள் இருக்காதோ.

இல்லையென்று சொல்ல முடியாது—சிலதுகள் பிடிபடாமல் இருக்கும்.

அது ஏன் ?

அதுவா......? அது என் அந்தப்புற வேலைக்காரன் மோசெப் இருக்கிருனே அவன் இனத்தைச் சேர்ந்தது. பிடிபடாமல் இருப்பதற்கு மூன்றே மூன்று காரணங்கள் தான் உண்டு. மற்ெருருத்தியின் மேல் கட்டுக் கடங்காத காதல்—அளவுக்கு மிஞ்சிய கோழைத்தனம்.—இன்ெனென்று.........சீ......அதை எப்படிச் சொல்லுவது..... கடைசி வரையில் ஒருத்தியை அடைவதற்கு ஏற்ற ஆற்

றல் இல்லாதிருத்தல். இவை மூன்றும் தான் அதற்கு முதல் காரணம்.

உண்மையாகவா......? ஏண்டி நீ நம்புகிருயா ?......

என்ன நம்புகிருயா என்ரு கேட்கிருய். அதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. நான் உறுதியாகக் கூறுகிறேன். இதைப் போன்ற ஆண்களின் எண்ணிக்கை அதிகம்! நம்பக் கூடாத அளவுக்கு அதிகம்! அவர்கள் மற்றவர்களைப் போன்றே இருப்பார்கள்......நன்ருக ஆடையணி பூண்டு கண்ணைக் கவருகின்ற மயில்கள் போல் இருப்பார்கள். சீ மயிலுக்கு அவர்களை உவமை கூறியது கூடத் தவறு. மயிலாவது தன் அழகிய தோகை விரித்து ஆடும். கார்கண்டு களிப்படையும். இவர் களுக்கோ எண்ணமிருக்கும். வெளிக்குக் காட்டிக் கொள்ள மாட்டார்கள். வேதனை படுவார்கள். வெட்கப் படுவார்கள்.

அப்படியா......?

கோழைகளோ! சீ அது பெரிய தொல்லை. வெட் கத்தைவிட்டு நாமே வலிந்துசென்று மடக்கினல் கூட வெட்கப்பட்டு பயந்து விலகியோடும் வீரர்கள். அவர்கள் தனித்துப் படுக்கப்போகும்போதுகூட அறையில் ஒரு நிலைக்கண்ணுடி இருந்தால் போதும். ஆடையை அவிழ்க் கவேமாட்டார்கள். அவ்வளவு வெட்கமும் பயமும் நிறைந்த வெத்து வேட்டுக்கள். அவர்களோடு நாம் சற்று வலிய வம்பிற்கு நிற்கவேண்டும். கண்ணம்பை வீசி வீசிக் கருத்திலே காமத்தீயை மூட்டவேண்டும். கையைப் பிடித்துக் கழுத்தை நெளித்து; மெய்யைத் தொட்டு மெல்லப்பாடி; கிட்டி நெருங்கிக் கிள்ளிச்சிரித்து; தொட்டு இழுத்துத் தோளில் சாய்த்து; காமக்கதைகள் கனிச்சுவைப் பாடல்கள் பாடி நாமே வலிய இழுக்க வேண்டும். அப்படிச் செய்தாலும்கூடச் சில சமயங்களில்

அவை பயனற்றதாகிவிடும். அதுகளுக்குப் பாவம் ஒரு பெண்ணிடம் எப்படி எங்கிருந்து பழகுவது என்பது கூடத் தெரியாது. அதுகளின் முன் மூர்ச்சையற்று விழுந்தால்—இதுதான் அதுகளிடம் கடைசி முறையாகக் கையாளவேண்டிய முயற்சி......அதுகள் உனக்கு வேண்டிய பணிவிடைகள் செய்யும்......அம்முறையைக்கூட நீ சிறிது நீடித்தால்—அதாவது நீ இன்னும் உணர்வு பெருதவளாக, மூர்ச்சை தெளியாதவளாக நடிப்பாயானுல் கெட்டது காரியம். அதுகளுக்காகத்தான் நீ இப்படிச் செய்கிருய் என்பதை உணர்ந்துகொள்ளாது. உடனே மற்றவர்களைக் கூவி உதவிக்கு அழைக்கும்......வாய்ப் பேச்சில் சூரர்கள்...ஆனல் வகையறியாத மட்டிகள்... எனக்கு மற்றவள்மேல் காதலாக இருப்பவர்கள்தான் பிடிக்கும். மிக விரைவிலே மீன்கொத்தி மீனைக்கொத்துவதைப்போல அவர்களைக் கொத்திக்கொள்வேன்.

நீ சொல்வதெல்லாம் சரிதான். ஆனல்......இங்கு யாருமில்லையே ?

இருக்கிருனடி......! இருக்கிருன்......!

இங்கா !

இங்கென்பதென்ன—எங்கும்—சற்று பொறு என் கதையைச் சொல்லுகிறேன் கேள்:—

" இரண்டு ஆண்டுகளுக்குமுன் கோடையைக் கழிப்பதற்கு நானும் என் கணவனும் எங்கள் சிற்றூருக்குச் சென்றிருந்தோம். அவ்வூரிலுள்ள வயல்களில், தோட்டங்களில் பெரும்பகுதி எங்களுக்குச் சொந்தமானது. அச்சிற்றூருக்கு எங்கள் முன்னோர்களின் குடும்பப் பெயரான "பிரேசியர்" என்பதே பெயர். மிக மிகப் பட்டிக்காட்டை வேறெங்கும் நான் இது வரையில் பார்த்ததே கிடையாது.

ஏழையின் வீட்டிலே இருக்கின்ற அழகு நங்கையைப்

போல மண்ணில் மறைந்து கிடக்கும் மாணிக்கத்தைப் போல முள் நிறைந்த காட்டுப் புதரில் பூத்த முல்லையைப் போல அச்சிற்றூரின் இடையில் அழகிய மாளிகை. பணச் செருக்கால் என் முன்னோர்கள் அதைக் கட்டினார்களே ஒழிய வேறில்லை அது நகரத்திற்கு மிக மிகத் தொலைவில் இருந்ததால் கண்டு களிக்கவோ—அல்லது வந்து தங்கி உண்டு களிக்கவோ யாரும் அங்கு வருவதில்லை. தோப்புக் கிடையில் சீந்து வாரற்றுக் கிடந்தது அந்தச் சிங்கார மாளிகை.

அதைச் சுற்றிலும் குடியானவர்கள் குடிசை· குடியானவர்களோ, நாகரிகம் என்பதே அறியாதவர்கள் உயர்ந்து பருத்த உருவங்கள். பரட்டைத் தலையர்கள், கண்டதை உண்டு கடுங்குளிர் மழையிலே திரியும் ஆடை உடுத்தத் தெரியாத அரை நிர்வாணிகள். உடல் நாறத் தலை நாற உரையாடுகின்ற வாய் நாற வாழ்கின்ற மனித மிருகங்கள். அவர்களைத் திருத்த முடியாது. திருத்த நினைப்பது கடலைத் திடலாக்க நினைப்பதைப் போன்றது தான்.

ஊம்...... ..! ஊம்......பிறகு

பிறகு அவர்களை யெல்லாம் கூட்டிச் சீர்திருத்தக் கதைகள், சிரிப்பூட்டும் சிந்துகள், இயற்கையைப் பற்றிய இன்னிசைப் பாட்டுக்கள் கட்டுரைகள் நாவல்கள் யாவும் படித்துக் காட்டுவேன். வேறு பொழுது போக்க வழி யில்லை யல்லவா-வாயைப் பிளந்து வானத்தைப் பார்த்துக் கொண்டே கேட்பார்கள். ஆனால் திருந்த மாட்டார்கள். பாலைவனத்தில் பாதிரியார் சொற்பொழிவுப் பணி புரிந் ததைப் போல என் முயற்சிகளெல்லாம் பயனற்றுப் போயின. எங்கள் நிலத்தைப் பயிரிடுகின்றவன் மகன். வயது இருபத்திரண்டு இருக்கும். சிறிது அழகும் உடை யவன். பாதிரியாக வேண்டுமென்று கிருத்துவக் கல்லூரி

யில் படித்து, வெறுப்புற்றுத் திரும்பியவன். பார்த்தேன் வேறு வழியில்லை அவனை என் அந்தப்புற வேலையாளாக அமர்த்திக் கொண்டேன்.

ஊம்......பிறகு.

பிறகு......... பிறகு......கேளடிக் கேள். அவனை நன்றாக நடத்தத் தொடங்கினேன். வேலைக்காரனைப் போல அல்ல வேறு வகையாக. நான் அவனுக்குத் தூண்டிவிடவில்லை - தூப மிட்டேன். தூபமிட்டதோடு விடவில்லை— தூண்டுகோலாகவும் மாறினேன்.

யார் ஜோ ஜெப்பா!

ஆமடி! ஆம்......அந்தத் தடிக்கழுதை தான். அந்த விளையாட்டு எனக்கு மிகப் பிடித்திருந்தது. வேலைக் காரன் என்று சொல்லுவாய். அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. அவனும் தன்னை அப்படி நினைத்துக் கொண்டான் இல்லை—நினைத்துக் கொள்ளக் கூடிய வாய்ப்பை நான் அவனுக்குக் கொடுத்தது கிடையாது.

என் வேலைக்காரி எனக்குக் காலையில் ஆடை அணி யும் போதும், மாலையில் அதைக் களையும் போதும் அறை யில் இருக்கிற அழைப்பு மணியை அடிப்பேன். அவன் வருவான். அவனிடம் அது செய்தாயா—இதைக் கேட்டாயா, அங்கு போனாயா—என்று ஏதாவது கேள்வி களைக் கேட்டுக் கொண்டே இருப்பேன்.

வீட்டுக் கூரையில் தீ பிடித்துக் கொண்டதைப் போல அவன் உள்ளத்தில் காமத் தீ பிடித்துக் கொண் டது. அவனுடைய அழுக்கு படிந்த உடலைப்பற்றி உடையைப்பற்றி ஒரு நாளில் ஒரு வார்த்தை கூட நான் கூறியது கிடையாது. பதினைந்து நாட்களுக்குள் அவன் முழுதும் மாறி விட்டான். காலை மாலை குளிப்பான் அழகாகத் தலைவாரிக் கொள்வான். தூய ஆடைகளையே அணிவான் அடிக்கடி "ஓ டெ. கொலோங்" (ஓடிக்

கலான்) தடவிக் கொள்வான். வாசனையோ மண்டை வலி உண்டாக்குகின்ற அளவு மாளிகை முழுதும் கம் மென்றிருக்கும். நான் ஒரு சமயம் ஆண்கள் இப்படி யெல்லாம் வாசனை தடவிக் கொள்ளக்கூடாது என்று கண்டித்திருக்கிறேன்.

பாரிசிலிருந்து சில புத்தகங்கள் படிப்பதற்காக வர வழைத்தேன். பொழுது போக்காகப் படிப்பேன். வீட்டி லிருப்பவர்களுக்கும் மற்றவர்களுக்கும் கொடுப்பேன். அவைகளில் சில இவனுக்காகவே வரவழைத்திருந்தேன். அவைகள், கல்லூரி மாணவர்கள், பாதிரி மாணவர்கள், கருத்தைக், காளைப் பருவத்துச் சேட்டைகளைத் தூண்டி விடக்கூடியவை. அதைத் தெரிந்தே தான் நான் இவனுக் காக வரவழைத்தேன் கொடுத்தேன். படித்தான். படித்த திலிருந்து பையன் ஒரு மாதிரி மாறிக்கொண்டே வந்தான்.

அவனிடம் நான் அடிக்கடி நெருங்கிப் பழகுவேன். பரிகசிப்பேன். மனம் விட்டுப் பேசுவேன். அவனுடைய பெயர் ஆந்திரே ழோசெப் ஆனால் நான் ழொசெப்! ழொசெப்! என்று தான் வாயாரக் கூப்பிடுவேன்.

அவன் செயலில் அடிக்கடி மாற்றங்கள் தோன்றின. அவனை நினைக்க நினைக்க எனக்குப் பரிதாபமாகக் கூட இருந்தது அவன் நாளுக்கு நாள் மெலிந்தான்........ சேவலைப் போல மெலிந்து கொண்டே இருந்தான். எனக்கு அது ஒரு நல்ல விளையாட்டாக இருந்தது— கோடைக்காலம் வசந்த காலமாய்த் தெரிந்ததே ஒழிய வெப்பம் நிறைந்த வெய்யற்காலமாகத் தோன்றவில்லை. அவ்வளவு இன்பமாக இருந்தது அந்த விளையாட்டு.

ஒரு நாள் என் கணவர் இல்லை. அவர் பாரிசுக்கு ஏதோ வேலையாகச் சென்றிருந்தார். நான் அவனைக் கூப் பிட்டு வண்டி கட்டச் சொன்னேன். வெய்யல் அன்று மிகக் கொடுமையாக இருந்தது.

சொல்லடி......கதை நன்றாக இருக்கிறதே.....த சொல்லு.

வண்டி போய்க்கொண்டே இருந்தது. அவன் வண்டி ஓட்டினானே ஒழிய அவன் எண்ண அலைகள் எல்லாம் வண்டியின் உள்ளே தனித்திருந்த என்னிடத்தில் வட்ட மிட்டுக் கொண்டிருந்தன. ஆனால் அவன் வாயிலிருந்து ஒரு சொல்லாவது வெளி வரவில்லை. பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன் பளிச்சென்று ஒரு எண்ணம் தோன்றியது எனக்கு.

சங்கடத்தில் சிக்கிக் கொள்ளும் போது தப்பித்துக் கொள்வதற்கு ஏற்ற சாக்குப் போக்கு, தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதற்கேற்ற தில்லு மல்லு திடீர் வேட்டுகள் பளிச்சென்று பெண்களுக்குத் தோன்றிவிடும். அதற்காக அவர்கள் மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டிய கட்டாயமே கிடையாது. பெண்களுக்கென்றே இயற்கை தந்த பெருஞ் செல்வமடி! இது—பெருஞ் செல்வம்...!

பெண்களுக்குரிய சாகசத்தோடு ஜோசெப்! ஆ...என்னடா...உடம்புக்கு என்னமோ தெரியவில்லை உடம்பு ஒரு மாதிரியாக இருக்கிறது என்று உடலைச் சிறிது நெளித்து துயரம் நிறைந்த குரலோடு கூறினேன்.

அந்த முண்டம் என் நோயை அறிந்துகொள்ள வில்லை துடிதுடித்து என்னம்மா! என்ன...உடம்பு எப்படி இருக்கிறது என்ன செய்கிறது என்று கேட்டான் வண்டியை நிறுத்திவிட்டு.

இந்த ஆண் இனமே இப்படித்தான்—பெண்களின் மனநிலையைப் புரிந்துகொள்ள முடியாத தெரிந்துகொள்ள முடியாத குருடர்கள் குருடர்கள் மட்டுமல்ல—கோழைகள் பண்பறியாத பதர்கள்.

ஜோசெப்! எனக்கு மயக்கம் வருகிறமாதிரி இருக்

கிறது...இந்தா! என்னை அந்தப் பசும் புற்றரைக்குத் தூக்கிக்கொண்டுபோ என்றேன்...புற்றரையில் கொண்டு போய்க் கிடத்தினான். தாங்கமுடியாதவள் போலப் பெருமூச்சுவிட்டேன். தலை சுற்றுவதாகப் பாசாங்கு செய்தேன். புரண்டேன் சிறிது கூச்சலிட்டேன் அவன் கையைப் பிடித்து மார்பின்மீது வைத்து அழுத்தச்சொன்னேன். ஏதோ உருண்டையாக வயிற்றிலிருந்து கிளம்பி மார்பில் வந்து அடைக்கிறது என்று பாசாங்கு செய்தேன் என் மேலணியை 'விலக்கி மெல்ல "கச்சை" அவிழ்க்கச் சொல்லி கத்தினேன். இங்கே அழுத்து அங்கே அழுத்து என்று அவன் கையைப்பிடித்து அங்கும் இங்கும் சேர்த்து அணைத்துக்கொண்டேன். மூர்ச்சையற்று விழுந்தேன் அறிவிழந்தவளாக அப்படியே கிடந்தேன்.

பாவம் அறிவற்ற அவன் என் மன நிலையைத் தெரிந்துகொள்ள முடியாத மண்டு, நான் கூறிய அத்தனையும் அப்படியே ஒன்று விடாமல் செய்துகொண்டிருந்தான். நான் நீண்டநேரம் ஏன் ஒரு மணி நேரங்கூட இருக்கும் அப்படியே உணர்வற்றவள்போலக் கிடந்தேன். கண்ணைத்திறக்காமல் அவன் பணிவிடை எல்லாம் ஏற்றுக்கொண்டிருந்தேன். நீண்ட நேரம் அவன் பணிவிடைகள் நீடித்தனவே ஒழிய நான் எதிர்பார்த்தது கிட்டவில்லை.

கண்ணைத்திறந்தேன் என்னை மீண்டும் வண்டியில் சேர்க்கும்படிக் கட்டளை இட்டேன். வேறு நான் என்ன செய்ய முடியும் இதுபோன்ற மண்டுகளிடத்தில் இன்னும் இதைவிட வேறு என்னதான் செய்வது—? எதிர்பார்ப்பது? வீட்டிற்கு அழைத்துப்போகும்படிச் சொன்னேன் சற்றுச் சலிப்டானகுரலில் என்னை மாளிகைக்கு அழைத்து வந்தான்...அவ்வளவுதான்.

அப்படியானால் உனக்கு அதிலிருந்து அடிக்கடி மயக்கம் வந்திருக்கும்?

இல்லை... அதோடு சரி! இதுபோன்ற மடையனை மண்டை உதவாக்கரையையா ஆசை நாயகனாக ஆக்கிக் கொள்வது போடிப்போ.

அவன் இன்னும் வேலையில் இருக்கிறானா தொலைத்து விட்டாயா.

இருக்கிறான் ஆம். அவன் இன்னும் என்னிடத்தில் தான் இருக்கிறான். பாவம் ஏன் அவனை வேலையைவிட்டு விலக்கவேண்டும். அவனிடத்தில் வேறெந்த குற்றமும் இல்லையே இன்னும் என்மேல் அவன் உயிரை வைத்துக் கொண்டுதானே இருக்கிறான்.

அவன் எங்கேடி—அந்த மண்டு எங்கே இருக்கிறான்.

சீமாட்டி ஆந்திரே தெபிரசியர் சுவற்றிலிருந்த ஒரு ஆணியை அழுத்தினாள் மணியடித்தது. அறைக்கதவைத் திறந்துகொண்டு ஜோசப் வந்தான். அறைமுழுதும் வாசனைக் கப்பிக்கொண்டது.

ஜோசப்! எனக்கு உடம்பு என்னவோ மாதரி இருக்கிறது. வேலைக்காரியைக் கூப்பிடு என்றாள்.

வந்தவன் ஆடாது அசையாது அணிவகுப்பைப் பார்வையிடும் தலைவன் முன் நிற்கும் போர்வீரன்போல நின்றுகொண்டிருந்தான். அன்பு நிறைந்த பார்வையோடு காதல்கசியும் கண்களோடு சீமாட்டியை வைத்த கண் வாங்காது பார்த்துக்கொண்டே நின்றான்.

"முண்டம் நாம் இப்பொழுது புற்றரையில் இல்லையடா—போ! போய் அவனை வரச்சொல் அவன் உன்னை விட நன்றாக என் உடல் நோயை மாற்றுவான். போடா! போய் வரச்சொல்" என்றான் சீமாட்டி ஆந்திரே தெபிரசியர்.

